# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 6 | இதழ் 7 | செப்டம்பர் 10, 2019 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 6 | Issue 7 | September 10th, 2019 | Annual Subscription Rs. 100/-




## சரணாகதிப் புரிதல்

நமக்குத் தோன்றும் உணர்வுகளின் மீது எந்த எதிர்ப்புணர்வும் காட்டாமல் மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்வதுதான் அகச் சரணாகதி ஆகும்.

எதிர்ப்புதான் துன்பத்தின் உயிர்நாடி.

எதிர்ப்பு இல்லாததால் துயர உணர்வு கூட தானாக நகர்ந்து மறைந்து விடுகிறது.

நமது மனதின் எதிர்ப்பின்றி நகரும் தன்மைதான்
- நமது விடுதலை.
- நம் மனதின் விடுதலை.
- நாம் அடையவேண்டிய விடுதலை.

**– ஸ்ரீ பகவத்**

# ஸ்ரீ பகவத் ஐயாவின் தியான முகாம்

## உள்ளே


| | |
|---|---|
| சரணாகதிப் புரிதல் | 3 |
| ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு ஒரு மகிழ்வான அறிவிப்பு | 6 |
| கேள்வி பதில் | 7 |
| ஆசிரியர் பகுதி | 9 |
| நிகழ்ச்சி நிழல்கள் | 10 - 11 |
| ஜென்கதை - தோல்வியே வெற்றி | 11- 12 |


கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075





# சரணாகதிப் புரிதல்

- ஸ்ரீ பகவத்

ஞானத்தை நாம் புரிதல் என்று குறிப்பிடுகிறோம்.

அதாவது நமது அறிவின் இயலாமையை ஒரு கணிதத்தைப் புரிந்து கொள்வதைப் போல் புரிந்து கொள்வது தான் இந்தப் புரிதல்.

புரிதலின் மூலம் ஏற்படுவது அகச் சரணாகதி.

சரணாகதியால் விளைவது விடுதலை.

ஞானம் என்பது வேறு; விடுதலை என்பது வேறு.

விடுதலை என்பது கணிதத்தைப் புரிந்து கொள்வதைப் போல் புரிந்து கொள்வது அன்று.

அது தாமாக நிகழும் ஒரு நிகழ்வு.

நிகழ்வுகள் அனைத்தும் இயற்கையானவை. அவை எப்படி வேண்டுமானாலும் நிகழலாம்.

நிகழ்வுகள் அனைத்தையும் நிகழ்வாக ஏற்றுக் கொள்வதுதான் விடுதலை.

நிகழ்வுகள் அனைத்தையும் உணர்வு பூர்வமாக ஏற்றுக் கொள்வதுதான் விடுதலை.

ஞானம் எனும் புரிதல் ஏற்பட்ட நிலையில்தான் நிகழ்வுகள் அனைத்தும் விடுதலையின் தரத்துக்கு உயர்த்தப் படுகின்றன.

உணர்வுகள் அனைத்தும் தாமாக வந்து தாமாகப் பிரவகித்து ஓடுகின்றன.

நமது உணர்வுகள் அனைத்தும் தாமாக மறைந்திட நமது அறிவு ஒத்துழைப்பு கொடுக்க வேண்டுமா?

உணர்வை உணர்வால் அறிய நமது அறிவு ஒத்துழைப்பு கொடுக்க வேண்டுமா?

நாம் அப்படி எந்த ஒத்துழைப்பையாவது கொடுத்தால் அது தான் நமது விடுதலைக்கு விரோதமானது.

நமது அறிவு தனது இயலாமையைப் புரிந்துகொண்டு, அகச் சரணாகதி அடைவதுதான் நாம் நமது விடுதலைக்காகச் செய்ய வேண்டிய மிகப்பெரும் உதவி.

விடுதலை என்பது எவருடைய உதவியும் இல்லாமல் தாமாக நடைபெற வேண்டிய ஒன்றாகும்.

நாம் மகிழ்ச்சியை விரும்புகிறோம்; துயரத்தை வெறுக்கிறோம்.

நாம் மகிழ்ச்சியாக இருக்கும்போது நாம் முயற்சியற்று இருக்கிறோம்.

மகிழ்ச்சியோடு இருக்கும்போது நாம் நம்மை மறந்து இருக்கிறோம்.

ஆனால் நாம் துயரத்துடன் இருக்கும்போது, அதிலிருந்து விடுபட வேண்டும் என்ற எண்ணமும் சேர்ந்தே ஏற்படுகிறது.

துயரத்தோடு இருக்கும்போது நாம் நம்மை மறந்து இருப்பதில்லை.

நாம் துயரத்தில் இருக்கும்போது நாம் நம்மை சரிபண்ண வேண்டிய பொறுப்பையும் எடுத்து விடுகிறோம்.

அப்படிப் பொறுப்பு எடுப்பதுதான் விடுதலைக்கு விரோதமாக அமைந்துவிடுகிறது.

நாம் அந்தப் பொறுப்பையும் விடும்போது விடுதலை தாமாக ஏற்படுகிறது.

விடுதலையை நாம் திட்டமிட்டுக் கொண்டு வர முடியாது.

விடுதலை என்பது நமது இயற்கையான இயல்பான நிலை.

நாம் அதில் தலையிடும் காரணத்தினாலேயே அந்த விடுதலையில் தடங்கல் ஏற்பட்டு விடுகிறது.

நடந்ததாகக் கூறப்படும் ஒரு சம்பவம்.

ஒருவர் புற்று நோயினால் அவதிப்படுகிறார்.

மருத்துவர் ஒருவர் அவருக்கு வேண்டிய அனைத்து சிகிச்சைகளையும் கொடுக்கிறார்.

எல்லா சிகிச்சைகளையும் கொடுத்து முடித்த பிறகும் அந்த நோயாளிக்குக் குணம் கிடைப்பதாக இல்லை.

மருத்துவர் அந்த நோயாளியிடம் கூறுகிறார், "எங்களால் முடிந்த அனைத்து சிகிச்சைகளையும் உங்களுக்குக் கொடுத்துவிட்டோம். உங்கள் நோய் கட்டுப்படுவதாகத் தெரியவில்லை. உங்கள் நோய் குணமாகும் வாய்ப்பு கிடையாது. இன்னும் ஒரு மாதத்திற்குள் நீங்கள் இறந்து விடுவீர்கள். மரணத்தை ஏற்றுக் கொள்வதற்கு உங்களை நீங்களே ஆயத்தப்படுத்திக் கொள்ளுங்கள்."

அந்த நோயாளியும் தனது மரணத்தை மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டார். மரணம் அவருக்கு மன வேதனையைக் கொடுக்கத்தான் செய்தது. ஆயினும் அதனை ஏற்றுக் கொள்வதைத் தவிர அவருக்கு வேறு எந்த வழியும் இல்லை.

அதைத் தவிர்த்து விடுவதற்கு எந்தச் சாத்தியக்கூறும் இல்லை. ஆகவே அவர் மிகுந்த மன அமைதியுடன் காணப்பட்டார். அவரது மரணத்தினால் வருத்தம் அடையக்கூடிய உறவினர்களுக்குக் கூட ஆறுதல் கூற ஆரம்பித்தார்.

இரண்டு நாட்கள் கழித்து மருத்துவர் அந்த நோயாளியிடம் புதிய செய்தி ஒன்றைக் கூறினார். "இப்போது புதியதாக ஒரு மருந்து வந்துள்ளது. அந்த மருந்தின் மூலம் பலர் புற்று நோயிலிருந்து மீண்டுள்ளார்கள். அதனை நாளை முதல் உங்களுக்கு கொடுக்கப் போகிறோம். நீங்கள் பிழைத்துக் கொள்ள ஒரு வாய்ப்பு உள்ளது".

மருத்துவர் இப்படி கூறியது முதல் நோயாளி பதற்றமடைய ஆரம்பித்துவிட்டார்.

மரணம்தான் நிச்சயம் என்ற நிலையில் அமைதியாகக் காணப்பட்ட அவர், குணமாக வாய்ப்பு உள்ளது என்ற நிலையில் பதற்றம் அடைந்திட காரணம் என்ன?

மரணம்தான் நிச்சயம் என்ற நிலையில் மனம் நமது மரணத்தைக் கூட மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்கிறது.

தப்பித்துக் கொள்ள வாய்ப்புள்ளது என்ற நிலையில் நம் மனம் மரணத்தின் துயரத்தை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்வதில்லை.

நாம் நமது துயரத்தை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளும் போது என்ன நிகழ்கின்றது?

நமக்கு ஏற்படும் துன்ப உணர்வு எந்த எதிர்ப்புமின்றி செயல்படுகிறது.

இப்படி நமக்கு தோன்றும் உணர்வுகளின் மீது எந்த எதிர்ப்புணர்வும் காட்டாமல் மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்வதுதான் அகச் சரணாகதி ஆகும்.

எதிர்ப்புதான் துன்பத்தின் உயிர்நாடி.

எதிர்ப்பு இல்லாததால் துயர உணர்வு கூட தானாக நகர்ந்து மறைந்து விடுகின்றது.

நமது மனோ இயக்கத்தில் எந்த எதிர்ப்பியக்கமும் குறுக்கிடாததால் அதன் இயல்பான இயக்கத்தில் அதுவும் நகர்ந்து கடந்து விடுகிறது.

நமது மனதின் எதிர்ப்பின்றி நகரும் தன்மை தான்

–நமது விடுதலை.

–நம் மனதின் விடுதலை.

– நாம் அடையவேண்டிய விடுதலை.

நம் மனோ இயக்கம் தாமாக இயங்கி தாமாக நகர்ந்து செல்வது தான் விடுதலை.

மனோ இயக்கத்தில் நாம் நமது எதிர்ப்பைக் கலந்து அதனை நாம் இயக்கும் போது,

மனோ இயக்கம் எதிர்ப்புக்கு உள்ளாகி விடுகின்றது; தடங்கல் ஏற்பட்டு விடுகின்றது; போராட்டம் ஏற்பட்டு விடுகின்றது.

இப்படி எதிர்ப்புடன் செயல்படுவது நமது அடிப்படையான அம்சம் அல்ல.

நமது இயல்பான உணர்வு அம்சம் இந்தப் போராட்டத்தில் ஈடுபடுவது இல்லை.

இடையூறு செய்வது அனைத்தும் கணக்கு போடும் நமது கணித அறிவுதான்; நமது புத்தி தான்.

நமது கணித அறிவுதான் 'இப்படி நடக்க வேண்டும்– இப்படி நடக்கக் கூடாது' என நிபந்தனைகளை விதித்து முரண்பாடு கொள்கிறது.

நமது கணித அறிவில் ஏற்படும் புரிதல் தான் மிகவும் முக்கியமானது.

இங்கு அகச் சரணாகதி அடையவேண்டியதும் நமது கணித அறிவுதான்.

நமது கணித அறிவு, தனது இயலாமையை உணர்ந்து அமைதி அடைந்து விட்டால்,

நமது இயற்கையான மன உணர்வுகள் யாவும் தமக்குள் முரண்படாமல் இயங்கத் துவங்குகின்றன.

மன இயக்கம் முழுவதும் முரண்படாமல் இயங்கும் புதிய பரிமாணத்துக்குள் பிரவேசித்து விடுகின்றது.

நமது முயற்சிகளும் புரிதலும் இந்தக் கணித அறிவின் எல்லைக்குள் மட்டுமே தேவைப்படுகிறது.

அங்கு தான் நமக்கு அறியாமையும் மயக்கமும் உள்ளது.

நமக்கு வேண்டிய தெளிவும் முடிவும் இந்தக் கணித அறிவின் எல்லைக்குள் மட்டும்தான் தேவைப்படுகிறது.

விடுதலையைப் புரிந்து கொள்வது என்பது வேறு; நமது இயலாமையைப் புரிந்து கொள்வது என்பது வேறு.

விடுதலையைப் புரிந்து கொள்வது என்பது உணர்வுபூர்வமானது.

நமது இயலாமையைப் புரிந்து கொள்வது என்பது அறிவு பூர்வமானது; கணித பூர்வமானது.

விடுதலையை நாம் இப்படிப் புரிந்து கொள்ளத் தேவையில்லை.

நாம் விடுதலை அடைந்து விட்டோம் என்பதைக் கூட அறிவுபூர்வமாக; கணித பூர்வமாகப் புரிந்து கொள்ளத் தேவையில்லை.

விடுதலை என்பது ஓர் இயக்கம்; தாமாக இயங்கும் நிகழ்வு.

அந்த இயக்கமே அந்த இயக்கத்தைப் புரிந்து கொள்கிறது.

நாம் நமது தாய் தந்தையின் குரலை உணர்வுபூர்வமாக அடையாளங்கண்டு புரிந்து கொள்வதுதான் இந்தப் புரிதல்.

இந்தப் புரிதல் மிகவும் அடிப்படையானது - இயல்பானது.

இதனை நாம் முயற்சி செய்து அடையத் தேவையில்லை.

இது எப்போதும் நம்முடனே தான் இருக்கிறது.

இதனை அடைவதற்கு நாம் செய்யும் அத்தனை முயற்சிகளும் அறிவின் அம்சம் உடையவை. அறிவின் முயற்சிதான் விடுதலைக்கு விரோதமாக செயல்படுகிறது.

நாம் அடைய வேண்டிய உயர்ந்த நிலை - கடைசி நிலை விடுதலை என்பதால் அதனை குறிவைத்து பலர் தியானப் பயிற்சிகளை வடிவமைத்துள்ளனர்.

உணர்வை உணர்வால் அறிதல், விழிப்புணர்வு பயிற்சி, தன்னை அறிதல்

-இப்படி எத்தனையோ பயிற்சிகள்.

இந்தப் பயிற்சிகள் யாவும் நமக்கு நல்ல அனுபவங்களை கொடுக்கலாம். ஆனால் விடுதலையைக் கொடுக்காது.

ஆனால் நமது கணித அறிவு

இந்தப் பயிற்சிகளை பிடித்துக்கொள்கிறது. விடுதலையை எதிர்பார்த்து இந்தப் பயிற்சியை செயல்படுத்துகின்றது.

இதனால் நமக்கு ஏற்படும் நல்ல அனுபவங்களும் நம்மை ஏமாற்றி விட்டுப் போய் விடுகின்றன.

ஆனால் ஆன்மிகத்தைப் பொறுத்த அளவில் சரியான ஒரு பயிற்சி முறையைக் கொடுப்பதானால்

அது நமது கணித அறிவைக் குறிவைத்து அமைக்கப்பட்டதாக இருந்தால் அது சரியானதாக இருக்கும்.

நமது அறிவின் இயலாமையை ஒப்புக் கொள்ளும்படி நமது முயற்சிகள் அமைந்திருந்தால் நமது கணித அறிவானது தனது போராட்டத்தை நிறுத்திக் கொள்ளும்.

ஆனால் விடுதலையை குறிவைத்து அமைக்கப்பட்ட பயிற்சிகள் அனைத்தும் விடுதலைக்கே விரோதமாக அமைந்துவிடுகின்றன.

விடுதலையைப் பொருத்தவரை அறிவு ஒதுங்கி கொண்டால் மட்டும் போதும். விடுதலை என்பது தாமாகவே நிகழ்ந்துவிடும்.

நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டு இறைவனைச் சரணடைதல் என்பது நமது கணித அறிவுக்குக் கொடுக்கப்படும் சரியான பயிற்சி.

அனைத்தும் இறைவனின் திட்டப்படியோ அல்லது கர்ம வினைப்படியோ தான் நடக்கிறது என்ற நம்பிக்கையில் ஈடுபாடு கொள்வது இத்தகைய பயிற்சிகளுள் ஒன்றுதான்.

நாம் என்ன பயிற்சி மேற்கொண்டாலும் சரி நமது கணித அறிவானது, தன்னை சீரமைக்க முடியாது என்ற தனது இயலாமையை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

அந்நிலையில்,

நமது விடுதலையின் இயல்பான இயற்கையான இயக்கத்தில்,

நாம் குறிக்கிடாமல் இருந்து விடுகிறோம்.

விடுதலையும் நிரந்தரமாகி விடுகிறது.

மற்றபடி விடுதலை உணர்வை மட்டும் குறிவைத்து செய்யப்படும் பயிற்சிகள் யாவும்

நமக்குச் சில மனோரீதியான தகுதிகளை வளர்த்துக் கொள்ள மட்டுமே உதவி புரிகின்றன.

அவற்றில் உள்ள நன்மைகளை பயன்படுத்திக் கொள்ளலாம்.

ஆனால் அவை நமக்கு விடுதலையைக் கொடுக்கும் என்பது மட்டும் நடவாத காரியம்.

நமது கணித அறிவின் இயலாமையைப் புரிந்து கொள்வதற்கு நம்பிக்கைகளை மட்டும் மையமாகக் கொண்டுள்ளதால் பலரும் அதில் அக்கறை காட்டுவதில்லை.

நமது கணித அறிவின் இயலாமையை நாம் கணித பூர்வமாகப் புரிந்துகொண்டால்

- அறிவுப்பூர்வமாகப் புரிந்து கொண்டால்

- இந்த அணுகுமுறை அனைவருக்கும் சாத்தியப்படும் எளிதான அணுகுமுறையாக ஆகிவிடும்.





# ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்

| நாள் | விபரம் | செலவு பகிர்வு |
|---|---|---|
| **10.10.2019**<br>காலை 11.00 மணிமுதல்<br>**13.10.2019**<br>மதியம் 3.00 மணிவரை | **4 நாள்**<br>**ஞான முகாம்**<br>இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம். | ரூ. **3000/-**<br>மட்டும். |

முன்பதிவிற்கு

**ஸ்ரீ பகவத் மிஷன்,** 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.

**79041 18421, 99942 05880, 97891 65555**

# ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு ஒரு மகிழ்வான அறிவிப்பு

நமது ஸ்ரீபகவத் பவன் ஆசிரமம், சேலம், பெரிய கவுண்டாபுரம், கொடம்பக்காட்டில் இயற்கை எழில் மிகு ஜருகு மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளது.

இங்கு ஒவ்வொரு மாதமும் **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்களின் ஞான முகாம் நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்து கொண்டு ஞானியாக திரும்பிச் செல்கின்றனர்.

மேலும் ஞான முகாமிற்கு வரும் அன்பர்கள் பலர் குடும்பத்துடன் வரவே விரும்புகின்றனர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களும் அனைவரும் குடும்பத்துடன் வந்து கலந்து கொள்வதையே விரும்புகிறார்.

ஆனால் குடும்பத்துடன் வரும் அன்பர்களுக்கு தனியறை வழங்கும் அளவிற்கு நம்மிடம் போதிய இடவசதி இல்லை. இதனை பூர்த்தி செய்யும் வகையில் ஐயாவின் ஆலோசனைப்படி நமது அன்பர்களின் விருப்பத்திற்கு இணங்க குடும்பத்துடன் தங்கி செல்ல வசதியான **30 தனி அறைகளை** எல்லா வசதிகளுடன் இயற்கை சூழலோடு கட்ட முடிவு செய்துளோம்.

ஒரு மனிதன் இயற்கையுடன் இணைந்து ஆரோக்கியமாக வாழ்வதற்கு மாசற்ற காற்று, தூய்மையான மழை நீர், இயற்கை உரத்தில் விளைந்த இரசாயனமற்ற உணவு இவை அனைத்தும் தேவை. நாமும் இங்குள்ள இயற்கை வளத்தைக் காக்கும் வகையில் பல புதிய பணிகளை செய்து வருகிறோம். தற்போது மழை நீரையே குடிநீராகவும் சமையலுக்காகவும் வருடம் முழுவதும் பயன்படுத்தி வருகிறோம். மேலும் மழை நீரை வீணாக்காமல் நிலத்தடி நீராக சேமிக்கும் வகையில் சில பணிகளை செய்திருக்கிறோம்.

இதனால் இயற்கை வளம் அனைத்தும் ஒருங்கிணைந்த இடமாக நமது ஸ்ரீபகவத் பவன் அமைந்துள்ளது.

மேலும் ஒரு ஞானியின் அருகாமையில் அவருடன் இணைந்து வாழ்வதற்கான வாய்ப்பு கிடைப்பது மிகவும் அரிது. அந்த அரிய வாய்ப்பு இங்கு தங்கிச் செல்லும் அனைவருக்கும் கிடைக்கும்.

நாம் இங்கு அமைக்கவிருக்கும் 30 தனி அறைகளில் தேவையானவற்றை விருப்பமுள்ளவர்கள் தங்களுக்குச் சொந்தமாக வாங்கி கொள்ளலாம். இதன் விலையாக ஓர் அறைக்கு ரூபாய் 5 லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம். இதனை சொந்தமாக வாங்கி கொண்டவர்கள் தங்களது விடுமுறை நாட்களிலும் ஓய்வு நாட்களிலும் குடும்பத்துடன் வந்து தங்கிச் செல்வதோடு ஞானியின் அருகாமையில் தங்கி அவருடன் உரையாடி ஞானத் தெளிவு பெறுவதற்கும் இயற்கை வளத்தை ரசித்து அனுபவித்து ஆரோக்கியமாக வாழ்வதற்கும் ஏற்ற இடமாகவும் இது அமைந்துள்ளது.

விருப்பம் உள்ள அன்பர்கள் இதனை வாங்கி பயன்பெறலாம்.

இந்த முப்பது அறைகளின் மூலம் வரும் உபரி தொகையை மூலதனமாக கொண்டு ஸ்ரீ பகவத் மிஷன் வளர்ச்சிப் பணிகளையும் சென்னை ஸ்ரீ பகவத் பவன் கட்டட பணிகளையும் நிறைவு செய்யலாம் என முடிவு செய்துள்ளோம்.

30 அறைகள் மட்டுமே கட்ட இருப்பதால் தேவைப்படுவோர் தங்களது தேவைகளை முன்கூட்டியே தெரிவிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். அறையை வாங்கியவர்கள் எப்போது வேண்டுமானாலும் வாங்கிய விலைக்கு மிஷன் மூலமாக மற்றவர்களுக்கு விற்றுக் கொள்ளலாம். எனவே இத் தொண்டில் ஆர்வமுள்ளவர்களும் வாய்ப்பு உள்ளவர்களும் நம்மோடு தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

தொடர்புக்கு

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3.

**99942 05880, 97891 65555**

V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...




ஞானம் அடைந்த பிறகு எல்லா பிரச்சினைகளையும் எளிதாக எதிர்கொள்ள முடிகிறது. ஆனால் மிக நெருக்கமானவர்களிடம் ஏற்படும் பிரச்சினைகளை எளிதாக எடுத்துக்கொள்ள முடியவில்லை. அவர்களை எவ்வாறு எதிர்கொள்வது?

**கேள்வி :** ஞானப் புரிதல் ஏற்பட்ட பிறகு வாழ்க்கை ஓரளவுக்கு நன்றாகத்தான் போகிறது. ஆனாலும் கூட நமக்கு மிக நெருக்கமான உறவுகளான மனைவி, குழந்தைகள், குடும்ப உறுப்பினர்கள் மற்றும் தினந்தோறும் ஒன்றாக பணிபுரிபவர்கள் என நம்மிடம் நெருக்கமான தொடர்பில் இருப்பவர்கள் சில நேரம் நம்மிடம் நடந்து கொள்ளும் விதம் நம்மை மிகவும் பாதிப்படையச் செய்கிறது.

அவர்கள் செய்யும் தவறுகளை நாம் எவ்வளவு பொறுமையாக எடுத்துக் கூறிய பிறகும் கூட அவர்கள் அப்படியேதான் நடந்து கொள்கிறார்கள். இதனால் நம்முடைய உணர்வுகளை தூண்டி உணர்ச்சிவசப்பட்டு கோபத்தையும் தேவையற்ற வார்த்தைகளையும் கொட்டி விடுகிறோம். இந்த மாதிரி சூழ்நிலைகளை எவ்வளவுதான் புரிதல் இருந்தாலும் என்னால் எதிர் கொள்ளவே முடியவில்லை. இது ஏன்?

இது போன்ற சூழ்நிலைகளை நான் எவ்வாறு எதிர்கொள்வது?

என்னைப் போன்றே பலருக்கும் இந்தக் கேள்வி இருக்கும் என்று நினைக்கின்றேன்.

அனைவரும் புரிந்து கொள்ளும் வண்ணம் எளிமையாக கூறவும்.

**பதில் :** புரிதலில் பயணிக்கும் பெரும்பாலானோர் கேட்கும் பொதுவான கேள்வியே இது.

பொதுவாக எல்லோரும் அவரவர்கள் இயல்பு படித்தான் நடந்து கொள்வார்கள். நாம் நினைக்கும்படி யாரும் எல்லா நேரங்களிலும் நடந்து கொள்ள மாட்டார்கள்.

நம்முடைய மன இயக்கமே நமக்கு கட்டுப்பட்டது கிடையாது. இதைப் புரிந்து கொள்வதை தான் ஞானம் என்று குறிப்பிடுகிறோம்.

நம்மிடமிருந்து வெளிப்படுகின்ற எந்த எண்ணமும் உணர்வுமே நம்முடைய கட்டுப்பாட்டில் இல்லாத போது நாம் எப்படி மற்றவர்களை "இப்படி நடந்து கொள்ள வேண்டும்" "அப்படி நடந்து கொள்ள கூடாது" என்று கட்டுப்படுத்த முடியும்?

அப்படி என்றால் இது போன்ற சூழ்நிலைகளை நிர்வாகம் செய்யாமல் நாம் அதை அப்படியே விட்டுவிட வேண்டுமா?

அப்படி நான் கூறவில்லை.

வேறு என்னதான் செய்வது?

இதுபோன்ற சிக்கலான சூழ்நிலைகளை எதிர்கொள்ளும்போது, நாம் இரண்டு விஷயங்களை முதலில் பிரித்து புரிந்துகொள்ள வேண்டும்.

ஒன்று, நாம் எதிர்கொள்ளும் இந்த சூழ்நிலையின் போது நமக்கு ஏற்படும் எண்ணமும் உணர்வும். அவை எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். அது முற்றிலும் இயற்கையானது. நம் கைவசம் இல்லாதது. அது நம் அகம் சார்ந்தது. அதை நிர்வகிக்கும் எந்தப் பொறுப்பும் நமக்கு இல்லை.

மற்றொன்று அந்தப் புறச் சூழ்நிலைக்கு நாம் செய்ய வேண்டிய செயல். நாம் நம்முடைய அறிவைப் பயன்படுத்தி புறத்தில் செய்ய வேண்டிய சரியான செயலை சிந்தித்து செயல்படவேண்டும்.

இவை இரண்டையும் நாம் பிரித்து புரிந்து கொள்ள வேண்டும்.

அதாவது நாம் எதிர்கொள்ளும் ஒவ்வொரு சூழ்நிலையின் போதும் நாம் இரண்டு விதமான அம்சங்களை எதிர்கொள்கிறோம்.

ஒன்று மனோ அம்சமான எண்ணங்களையும் உணர்வுகளையும் எதிர்கொள்வது.

மற்றொன்று புற அம்சமான செயலை எதிர்கொள்வது.

மனோ அம்சத்தைப் பொறுத்தவரை நமக்கு ஏற்படும் எண்ணமோ உணர்வோ எந்த மாதிரி வேண்டுமானாலும் வரலாம். அவை நம் கட்டுப்பாட்டில் இல்லை. மனோ அம்சம் சம்பந்தமாக நமக்கு எந்த வேலையும் இல்லை என்பதை புரிந்துகொள்ள வேண்டும்.

நமக்கு வேலை இருக்கும் இடம் புறம் மட்டுமே. புறச் சூழ்நிலையை முழுமையாக உள்வாங்கிக் கொண்டு அந்த சூழ்நிலைக்கு தகுந்த சரியான செயலை நமது அறிவை பயன்படுத்தி செயல் புரிவது ஒன்றே சரியானது.

நடைமுறையில் நமக்கு மிக நெருக்கமானவர்கள் நம் மனம் பாதிக்கும் படி நடந்துகொள்ளும் போது, நம்மால் இப்படி பிரித்துப் புரிந்துகொள்வது என்பது உடனடியாக முடியாமல் போய் விடுகிறது. அதனால் உணர்ச்சிவசப்பட்டு கோபத்தில் வார்த்தைகளை நம்மையும் மீறி கொட்டி விடுகிறோம். பிறகு "நாம் இப்படி நடந்து கொள்ளலாமா" என்று குற்ற உணர்ச்சி அடைகிறோம்.

உண்மையில் மனம் பாதிப்படையும் போது நமது நானென்ற தன்மையே பாதிப்படைகிறது. அதனால் தன்னை பாதுகாக்கும் பொருட்டு தன்முனைப்பு அடைகிறது. தன்முனைப்பு அடைந்த நான், தான் நினைத்தபடிதான் மற்றவர்கள் அனைவரும் நடந்து கொள்ள வேண்டும் என்றும், சூழ்நிலையும் தன் கட்டுப்பாட்டுக்குள் வர வேண்டும் என்றும் பிடிவாதம் பிடிக்கிறது.

இதனால் உணர்ச்சிவசப்பட்ட நிலையில் நம்மையும் மீறி வார்த்தைகளை கொட்டிவிடுகிறோம்.

உண்மையில் இங்கு நமக்கு நெருக்கமானவர்கள் செய்யும் தவறுகளால் நம் அகத்தில் உள்ள **நான்** தன்மை பாதிப்படைகிறது.

ஆதலால் நிதானத்திற்கு வருவது தாமதமாகிறது.

பிறகு நிதானத்திற்கு வந்தவுடன் தான் சூழ்நிலையையும் நம்மையும் தனித்தனியாக பிரித்து பார்த்து செயல்பட முடிகிறது.

நாம் நிதானத்திற்கு வரும் முன் நடக்கும் அத்தனை நிகழ்வுகளையும் நம்மை மீறி நடக்கும் அக உணர்வுகள் என எடுத்துக்கொள்ள வேண்டும். அதனால் ஏற்படும் குற்ற உணர்ச்சியையும் கூட அக உணர்வாகவே எடுத்துக் கொள்ள வேண்டும்.

இப்படி நம்முள் புரிந்துகொண்டு நாம் நிதானத்திற்கு வந்த பிறகு அந்தச் சூழ்நிலையை உள்ளபடியே சரியாக உணர்ச்சிவசப்படாமல் புரிந்து கொள்கிறோம். பிறகு அந்த சூழ்நிலையோடு நாம் தாமாகவே இணைந்து கொண்டு அந்தச் சூழ்நிலைக்கு தேவையான சரியான செயலை செய்யத் தொடங்குகிறோம்.

பொதுவாக நாம் யாரையும் மாற்றுவது என்பது எப்போதும் நடவாத காரியம். நாம் எதிர்கொண்ட சூழ்நிலையால் நம்மை பாதித்த எண்ண உணர்வுகளுக்கு முக்கியத்துவம் தராமல், நாம் செய்யவேண்டிய சரியான செயலுக்கு முக்கியத்துவம் தந்து செயல்படுவது ஒன்றே தீர்வு.

ஒரு ஜென் கதை மூலம் நாம் இதை புரிந்து கொள்ள முயற்சிப்போம்.

அது ஒரு மலைப்பாங்கான தேசம். அங்கு உள்ள சாலைகள் கல்லும் கரடுமாக இருந்தன. அவை நடக்கும் மக்களின் காலில் குத்தி துன்புறுத்தின. அந்த தேசத்து மன்னன் "எல்லா சாலைகளிலும் மாட்டுத் தோலை போர்த்த உத்தரவிட போகிறேன்" என்றான். அப்போதுதான் நடப்பதற்கு மெத்தென்று இருக்கும் என்பது அவனது எண்ணம். ஆனால் இதை நடைமுறைப்படுத்துவதற்காக ஆயிரம் சேனைகளை அனுப்பி கடுமையாக முயன்று வந்தான். அரசனால் எவ்வளவு முயன்றும் அவன் எதிர்பார்த்த தீர்வு கிடைக்கவே இல்லை. தீர்வு தேடி மிகவும் களைத்துப் போனான். ஓர் ஞானி அவனுக்கு ஓர் எளிய வழிமுறையை காட்டி தந்தார்.

"உன் பிரதேசத்திலுள்ள எல்லா சாலைகளிலும் மாட்டுத்தோலை விரிப்பதை விட உன் மக்கள் அனைவருக்கும் நல்ல காலணிகளை வழங்கி விடு. இதுதான் சாத்தியமான வழி" என்றார்.

ஞானியின் கருத்து அரசனுக்கு ஏற்புடையதாக இருந்தது. இதனால் மக்கள் அனைவரும் சுபிட்சம் அடைந்தனர்.

இது போல் தான் நாமும், அரசன் சாலைகளில் மாட்டுத் தோலைப் போர்த்தி தீர்வு கண்டு விடலாம் என்று நினைத்ததைபோல், மற்றவர்களை மாற்றிவிடலாம் என்று நாமும் தப்புக் கணக்கிட்டு தோல்வியை சந்திக்கிறோம். பிறகு ஒரு கட்டத்தில் தான் மற்றவர்களை மாற்றவே முடியாது என்ற எதார்த்த உண்மையை புரிந்து கொள்கிறோம். கால்களுக்கு காலணிகளை அணிந்து கொள்வதைப் போல் நாம் அந்த சூழ்நிலைக்கு நமது அறிவை பயன்படுத்தி என்ன செய்ய முடியும் என்று சிந்தித்து செயல்பட தொடங்குகிறோம்.

மற்றவர்களை மாற்ற நாம் போராடிய போராட்டம் போதும். இனியும் போராடுவது வீண்வேலை என்பதை விளங்கிக் கொண்டு நம்மால் அந்த சூழ்நிலைக்கு என்ன செய்ய முடியுமோ அதைச் செய்வதுதான் ஒரே தீர்வு.

மற்றவர்களை மாற்றும் முயற்சியில் இருந்து முற்றிலும் விடுபட்டு, அந்த சூழ்நிலைக்கு நமது அறிவை பயன்படுத்தி சரியான செயலால் புறத்தை எதிர்கொள்வோம்.

– நமது இந்த அணுகுமுறையே மற்றவர்களின் மாற்றத்திற்கு அடித்தளமாக அமையும்.

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

நமது வாழ்க்கைப் பயணம் முழுமையானதாக இருக்க வேண்டும்.

இது நாமாக ஏற்படுத்திய பயணம் அல்ல. தாமாக தோன்றியது. பயணம் தாமாகத்தான் முடிய வேண்டும். பயணத்தை நாமாக முடித்துக் கொள்ளக் கூடாது.

தற்போது பல தற்கொலை சம்பவங்களை பார்க்கிறோம். நாளுக்கு நாள் தற்கொலை செய்துகொள்வோரின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது.

இதற்கு காரணம் என்ன? இவர்கள் வாழ்க்கையில் தோற்றுப் போனதாக நினைக்கிறார்கள். வாழ்க்கையில் ஏற்படும் பிரச்சினைகளை எதிர்கொள்ள முடியாமல் விரக்தியில் இப்படி முடித்துக் கொள்கிறார்கள்.

உண்மையில் ஏதோ ஒரு வகையில் தோல்வியை எதிர்கொள்ள முடியாத நிலையில் இருக்கிறார்கள்.

இப்படி பிரச்சினைகளில் இருப்பவர்கள் யார் யார்?

பள்ளி மாணவ மாணவிகள், கல்லூரி மாணவ மாணவிகள், தொழில் முனைவோர், தொழில் அதிபர்கள், குடும்பத் தலைவன், தலைவி என எல்லா நிலைகளில் இருப்பவர்களிலும் பெரும்பாலோர் இப்படி இருக்கிறார்கள்.

பொதுவாக சமுதாயத்தில் வெற்றி பெறுவது எப்படி என்று கற்றுத்தரும் அமைப்புகளும் நபர்களும் நிறைய இருக்கிறார்கள். ஆனால் தோல்வியை ஏற்றுக்கொள்ளும் புரிதலைக் கொடுப்பவர்கள் எவருமே இல்லை.

உண்மையில் வெற்றி என்பது எது?

மற்றவர்களை விட அதிக மதிப்பெண் எடுப்பதா?

மற்றவர்களை விட அதிகம் சம்பாதிப்பதா?

மற்றவர்களை விட உயர்ந்த பதவியில் இருப்பதா?

இல்லை, இவை எதுவும் இல்லை.

இப்படி ஒப்பீட்டின் அடிப்படையில் பெறப்படும் வெற்றியோ அல்லது தோல்வியோ நிரந்தரமானதும் கிடையாது உண்மையானதும் கிடையாது.

ஒவ்வொருவரும் தனித்தன்மை வாய்ந்தவர்கள்தாம்.

இங்கு ஒப்பிடுதலே தேவையற்றது.

உண்மையில் தேவையானது என்னவென்று தெரியாமலே போட்டியும் பொறாமையுடனும் தான் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

மனித வாழ்வின் நோக்கம்தான் என்ன?

அவரவர் விருப்பத்திற்கு ஏற்ப நோக்கத்தை வைத்துக்கொண்டு அதற்காக ஓடலாம்.

ஆனால் அந்த ஓட்டத்தில் வாழ்வை இரசிக்கவும் அனுபவிக்கவும்

நிறைவாக வாழ்வும்

தவறவிட்டு விடுகிறோம்.

உண்மையான வாழ்வின் நோக்கமே அக விடுதலையோடு நிறைவாக வாழ்வதுதான்.

அக விடுதலையோடு இருப்பவர்கள் தான் நிறைவாக வாழமுடியும்.

அக விடுதலையை வழங்கக்கூடிய புரிதலை தான் ஞானம் என்று குறிப்பிடுகிறோம்.

ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் ஞான புரிதலால் பலர் துயரத்திலிருந்தும் பல்லாயிரக்கணக்கானோர் தற்கொலையிருந்தும் மீண்டிருக்கிறார்கள்.

அந்த வகையில் ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதி முதல் 18ஆம் தேதி வரை சேலம் ஸ்ரீ பகவத் பவனில் நான்கு நாள் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்றது. இதில் பலரும் கலந்து கொண்டு பயனடைந்தனர்.

மீண்டும் வருகின்ற அக்டோபர் மாதம் 10ஆம் தேதி முதல் 13ஆம் தேதி வரை நான்கு நாள் ஞான முகாம் நடைபெற உள்ளது. அனைவரும் பயன்படுத்திக்கொள்ளுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

# நிகழ்ச்சி நிழல்கள்



இரவின் மடியில் ஞான ஒளி...



ஸ்ரீ பகவத் பவன் மூங்கில் தோட்டம்







ஞான முகாமில்...







மாலை நேர நடைப்பயிற்சிக்கு பின் ஓய்வின்போது ஐயாவுடன் அன்பர்கள்





ஐயாவுடன்
பரமத்தி வேலூர்
திரு. இராஜகோபால்
மற்றும்
கரூர் திரு. கோ இரவி



ஐயாவுடன் நமது
அன்பர் திரு. முத்துச்செல்வன்,
திரு. மாரிமுத்து,
திரு. தியாகராஜன்

ஐயாவுடன் நமது அன்பர் திரு. குணாலன்,
திரு. சீத்தாராமன், திரு. கணேஷ், திரு. மாரிமுத்து

# ஜென் கதை

## "அகத்தோல்வியே புறவெற்றி"

புத்தர் பல ஆண்டுகாலம் ஞானத்தைத் தேடி அலைந்தார்.

உண்மையான தேடல் அது. தீவிரமான தேடல் அது.

இவர் ஷத்திரிய வம்சத்தை சேர்ந்தவர்.

ஆதலால் வெற்றி கிடைக்கும் வரை தன் தீவிர முயற்சியை கைவிடாமல் போராடும் குணம் கொண்டவர்.

எத்தனையோ குருமார்களை சந்தித்தார். யார் யாரிடமோ விசாரித்தார். யார் என்ன சொன்னாலும் அதைக் கேட்டு அதன்படி நடந்தார்.

மெய்ஞான வேட்கை மிக அதிகமாக இருந்ததுதான் அதற்கு காரணம்.

அவருக்கு வழிகாட்டிய, ஆலோசனைகள் சொன்ன அனைவருக்குமே அதிசயமாக இருந்தது. அவரது தீவிரத்தன்மையும் ஈடுபாடும் திகைப்பூட்டுவதாக இருந்தது.

அப்போது யாரோ ஒரு குரு -தினசரி அவர் ஒரு பருக்கை சோறு தான் சாப்பிட வேண்டும் என்று அறிவுரை கூற, புத்தர் அதையும் கடைபிடிக்க ஆரம்பித்தார்.

எப்படியாவது விடுதலை அடைய வேண்டும் என்பது அவரது பிரதான நோக்கமாக இருந்தது.

அதற்காக அவர் எதையும் செய்ய தயாராக இருந்தார்.

அவரது பல ஆண்டு கால தேடலின் கடைசி காலத்தில் கிடைத்த உபதேசம் அது.

அப்படியே செய்தார் புத்தர்.

மூன்று மாத காலத்தில் அவர் வெறும் தோல் போர்த்திய எலும்பு கூடு போல ஆகிவிட்டார்!

**ஜென்கதை தொடர்ச்சி...**

வயிறு ஒட்டி பின்னுக்குப் போய் முதுகோடு சேர்ந்து கொண்டது. கை கால்கள் எல்லாம் குச்சி குச்சியாய் மாறிவிட்டன.

அவரால் எழுந்து சரியாக நடமாடக் கூட முடியவில்லை. மூச்சு விடவும் சிரமமாக இருந்தது.

என்றாலும் அவருக்கு விடுதலை சித்திக்கவில்லை.

தேடுவதால் கிடைப்பதல்லவே விடுதலை!

பல ஆண்டு கால முயற்சிகள் வீண் தானோ என்று அவர் நினைத்தார்.

எத்தனை ஜபதபங்கள், மந்திரங்கள், அனுஷ்டானங்கள், தியானங்கள், உண்ணா நோன்புகள் எல்லாம் செய்து பார்த்தாயிற்று. இனி என்ன பாக்கி இருக்கிறது?

எல்லாம் செய்து எலும்புக்கூடாகி களைத்துப் போனார் அவர்.

இவர் ஷத்திரியர். தான் அடைய வேண்டிய இலக்குக்காக எவ்வளவு துன்பங்களை வேண்டுமானாலும் தாங்கிக் கொள்ளக் கூடியவர்.

முடிந்ததெல்லாம் செய்தாயிற்று.

இனி செய்வதற்கு எதுவும் இல்லை என்ற நிலை ஏற்பட்டது.

என்ன செய்வது என்று புரியவில்லை. தளர்ந்த நிலையில், தள்ளாடியபடி அவர் அருகில் உள்ள ஆற்றில் குளிக்கப் போனார்.

நிரஞ்சனா ஆறு ஓடிக்கொண்டிருந்தது.

அது ஒரு சிற்றாறு. தண்ணீரில் இறங்கி சரியாக நிற்க கூட முடியவில்லை அவரால். தண்ணீர் அவரை தள்ளி விடும் போல் இருந்தது.

சில வினாடிகளிலேயே அவர் ஆற்று நீரில் தள்ளப்பட்டு விழுந்துவிட்டார்.

அவரால் சமாளித்து எழக் கூட முடியவில்லை.

ஆற்று நீர் அவரை அடித்துக் கொண்டு போயிற்று.

அவரால் நீந்தவும் முடியவில்லை, வெள்ளத்தை எதிர்த்து போராடவும் முடியவில்லை.

ஆற்றின் போக்கில் அவர் போய்க் கொண்டிருந்தபோது,

கரையோரத்து மரக்கிளை ஒன்று ஆற்றுக்கு மேலே நீட்டிக் கொண்டிருக்க, அதைச் சிரமப்பட்டு பிடித்துக் கொண்டார் அவர்.

தன் முயற்சிகளெல்லாம் எவ்வளவு வீண் என்று அவர் நினைத்தார்.

மெய் தளர்ந்த நிலையில் மனமும் தளர்ந்தது.

நம்பிக்கை கழன்றது.

"இந்தச் சிற்றாறைக் கடக்க முடியாத நான் எவ்வாறு வாழ்க்கைக் கடலைக் கடக்க போகிறேன்" என்று எண்ணினார்.

பிறகு மிகவும் சிரமப்பட்டு கிளையைப் பற்றி கொண்டு கரையேறினார் அவர்.

தள்ளாடி நடந்து ஒரு மரத்தடியை அடைந்தார். அப்படியே சுருண்டு படுத்து விட்டார்.

மிகுந்த சோர்வில் உறக்கம் வந்தது.

பகலும் இரவும் உறங்கினார். மறுநாள் வெள்ளி முளைக்கையில் விழிப்பு ஏற்பட்டது.

மெல்ல எழுந்து அமர்ந்தார்.

கீழ்வானத்தில் மங்கிய ஒளி.

வெள்ளி மறைந்து கொண்டிருந்தது.

எல்லாம் இழந்து தளர்ந்த நிலை.

நகரக் கூட முடியவில்லை.

நோக்கங்கள், முயற்சிகள், இலட்சியங்கள், குறிக்கோள்கள், நம்பிக்கைகள், எதிர்பார்ப்புகள் எதுவுமே அவர் மனதில் இல்லை.

தன் முயற்சிகள் அனைத்தும் தோல்வியுற்றன.

ஓர் அரசன் போரில் தன் படைகளை இழந்து, ஆயுதங்களை இழந்து, இனி செய்வதற்கு எதுவுமில்லை என்ற நிலையில் இருப்பது போல் தன் தீவிர முயற்சிகள் அனைத்தும் தோல்வியுற்று இனி செய்வதற்கு எதுவுமில்லை என்ற நிலையில் நிராயுதபாணியாக தன் தோல்வியை ஏற்றுக் கொண்டு கையறு நிலையில் இருந்தார்.

அவர் மனம் தேடல் எதுவுமின்றி, செய்வதற்கு எதுவும் இல்லை என்று, அடைய வேண்டிய நிலை என்று எதுவும் இல்லாமல், அக சரணாகதி அடைந்த நிலையில் இருந்தது.

அந்த கணத்தில் அவரது மனம் முற்றிலும் வேறொரு பரிமாணத்தில் இயங்கியது.

பூரண ஞானம் பெற்றார்!

பூரணமாக விழித்துக்கொண்டார்!!

இதுவே அகவிடுதலை!!

**இவரது தீவிர ஜபதபங்கள் மந்திரங்கள், அனுஷ்டானங்கள், உண்ணா நோன்புகள், தியானங்கள் வழங்காத விடுதலையை ஆக சரணாகதி வழங்கிவிட்டது.**

**அகச் சரணாகதி என்பது தன் மனதின் கையறு நிலையை புரிந்தது கொள்வதால் ஏற்படுவதேயன்றி அனுஷ்டானங்களாலும் தியானங்களாலும் ஏற்படுவதல்ல.**

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 | Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of publication : First Week of Every Month | Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555